

உ

குமரன் றுணை.

மதுரை

# அங்கயற்கண்ணம்பிகை

## கொச்சகக்கலிப்பா.

காப்பு

தென்மதுரை யங்கயற்கட் டேவிமிசைப் பாமாலை
நன்மதுர மாக நவிற்றுவிக்கும் — பொன்மருவு
நாரணனு மாரணனு நாடிப் பரவுசித்தி
காரணத்தின் பொற்றாண் மலர்.

நூல்.

ர் திருவடியும் பொன்முடியும் புன்னகையும்
ப வால் வழுத்தியுமென் பாழ்ம்பிணிதான் தீராதோ
மாவாதி தெய்வ மடவார் மகுடமணி
ஆலவாய் திருமதுரை யங்கயற்க ணம்பிகையே. (௧)

இம்மா நிலத்தடியே னென்பிறந்தே னென்சொலினுஞ்
சும்மா விருப்பாய் துயரந் தவிர்ப்பாயோ
சிம்மா சனமேறிச் செங்கோல் கரம்பிடித்த
அம்மா திருமதுரை யங்கயற்க ணம்பிகையே. (௨)

இந்தமருந் தொப்பதில்லை யென்றென்று பண்டிதர்கள்
தந்தமருந் துண்டுண்டு சஞ்சலமே கொண்டலுத்தே
னெந்தவகை யாள்வாய்நீ யென்றறியேன் முப்போதும்
அந்தணர்கள் வந்துபணி யங்கயற்க ணம்பிகையே. (௩)

பச்சிலையும் வேரும் பலசரக்கும் பண்டிதர்கள்
வைச்சமருந் தித்தனைநாண் மட்டுமுண்ட தெத்தனையோ
வெய்ச்சிளைத்தே னெண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி
அச்சுறுவே னீயருளா யங்கயற்க ணம்பிகையே. (௪)

சிந்திப்ப தேதுமில்லை செய்வகையு மேதுமில்லை
முந்திப் புரிந்தவினை மூண்டுபிணி யாய்த்திரண்டு
வந்திப் பொழுது வருத்துமிதற் கேதுசெய்வேன்
அந்திப் பிறைநுதலா யங்கயற்க ணம்பிகையே. (௫

தேறுதலா ரேதேதோ செப்புவார் தீப்பிணியை
மாறுதலா ரில்லையரு ளாயே யிறைப்பேறு
ஊறுறுநீர் பறவைகா ளூற்றுகினு மோர்காலை
ஆறுறுநீ ரொப்பாரோ வங்கயற்க ணம்பிகையே. (௬

சாவார் பிறப்பார் தழைப்பார் தழலனைய
நோவா லெனைப்போல நொந்தவரைக் கண்டதுண்டோ
காவாது நீயென்னைக் கைவிடுவா யோபுகலாய்
ஆவா கொடிது கொடி தங்கயற்க ணம்பிகையே. (௭

நறுமென்றும் புதுமுகங் காணென்றும் வாகடத்தோர்
பற்பசெந்தூ ரங்கைதலம் பத்தியத்தோ டுண்ணவைத்தார்
சொற்பமோ வன்னவர்க்குச் சொன்னமள்ளித் தந்ததுதான்
அற்பமோ நீயறியா யங்கயற்க ணம்பிகையே. (௮

வீக்க மிருமல்கபம் வெப்புயிர்ப்பு மெய்தளர்ச்சி
நோக்கெரிவு முற்பலவா நோய்கடமா னொந்திளைத்தேன்
காக்க வுளதிசிரங் காயோ கடலுலகில்
ஆக்கமிருந் தென்மதுரை யங்கயற்க ணம்பிகையே. (௯

அப்பிரகங் காந்த மயந்தா ளகஞ்சொன்ன
பற்பசெந்தூ ரம்பலவும் பண்டிதருஞ் செய்தளித்தார்
சொற்படியுண் டுண்டு சுகஞ்சிறிதுங் கண்டறியேன்
அற்புதமே தென்மதுரை யங்கயற்க ணம்பிகையே. (௰

என்னை வருத்துபிணி யென்னளவு ருமமில்லாள்
தன்னையுமோ ராட்டத் தலைப்பட்ட தென்னசெய்வேன்
புன்னை யிலையின் மடிமேவா யிதுகொடிதென்
அன்னையே நீயறியா யங்கயற்க ணம்பிகையே. (௧௧

ஏனோ பிணியா லிரங்குவேன் றாயாநீ
தானுடலெல்லாந் தழற்பட்ட பஞ்சாமே
நானும் பொல்லாத நாயினுங்கீழ்ப் பட்டவனே .*
ஆனாலுங் காத்தருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௧௨

பண்டுநாட் பிணியாற் படுக்கைகதி யாய்க்கிடந்தா
லொன்னார் சிரித்திடுவ ருற்றார் சலித்திடுவ
ரின்னு சகியே னிதினு மிறத்தனன்றாம்
அன்னையுன் னுள்ளமெந்தோ வங்கயற்க ணம்பிகையே (௧௩)

வாராத துன்பமெது வந்தாலு மம்மையிருப்
பேரா தரித்துப் பிதற்றுவேன் பாழ்ம்பிணியைத்
தீராயோ நின்கருணை செய்வாயோ செய்யாயோ
ஆராத புத்தமுதே யங்கயற்க ணம்பிகையே. (௧௪)

நீர்க்குமிழி போலநிலை நில்லா வுடம்பிதிலே
வேர்க்குட் புழுவாக வெய்ய பிணிநிலைத்தே
தீர்க்கமுடி யாத்துயரஞ் செய்வதென்ன செய்வனுற்றார்
ஆர்க்குஞ் சுமையானே னங்கயற்க ணம்பிகையே. (௧௫)

வல்லிரும்பைத் தேய்க்குமர மானவுடன் றேய்த்திடுநோய்
சொல்லிலடங் காத துயர்தருநா னேதுசெய்வேன்
கல்லினுமுங் கரைக்குங் கண்ணருள்செய் பெண்ணரசே
அல்லிமலர்ப் பூங்குழலா யங்கயற்க ணம்பிகையே. (௧௬)

சோதிடர்கள் கோள்கள்புரி தோடமென்பார் வாகடத்தோ
ரீதுபித்தம் வாதமைய மென்று பலபுகல்வா
ரேதுகுறை யாயினுநீ யெண்ணினுற் றீராதோ
ஆதி முதற்பொருளே யங்கயற்க ணம்பிகையே. (௧௭)

சோதிக்க லாகாதுன் சோதனைக்கு நான்றரமோ
வாதிக்கும் வன்பிணியை மாற்றியுனைப் போற்றவைப்பாய்
நீதித் துறைதிறம்பா நீர்மைகொண்ட பாண்டியர்கள்
ஆதிக்கப் பேரரசே யங்கயற்க ணம்பிகையே. (௧௮)

வேற்றூ ரிடத்தும் விளம்புகிலேன் வெய்யபுலி
மாற்றுப் பசியினும்புல் வாய்க்கொண்டு வாழாதாற்
கோற்றேன் பொழியுமலர்க் கூந்தலாய் நோய்த்துயரம்
ஆற்றே னினியருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௧௯)

நீரென்பார் வாயு நிறைவென்பார் கட்டியினு
பாரென்பா ரில்லைபித்த பாண்டென்பா ரெம்மருந்தே
நேரென்பார் வன்பிணியை நீக்கறியா ருன்னையன்றி
ஆரென்பால் வந்தருள்வா ரங்கயற்க ணம்பிகையே. (௨௦)

கஞ்சிகஞ்சி யென்றுமிடிக் காற்றிலகப் பட்டோடும்
பஞ்சிபஞ்சி யாகப் படுந்துயரந் தீராதோ
மிஞ்சிமிஞ்சிப் பேசுசெல்வர் மேவுமனை வாய்தவிற்போய்
அஞ்சியஞ்சி நிற்பேனோ வங்கயற்க ணம்பிகையே. (௨௧)

நேற்றுத் துயரமின்று நேர்ந்திடுமோ வென்றிரங்கிச்
சோற்றுக் கலைகொடிய துன்பந் துடைத்தருள்வா
யூற்றுத் துறைதோறு மோடிப் பரவுவையை
ஆற்றுத் திருமதுரை யங்கயற்க ணம்பிகையே. (௨௨)

நில்லாமை கொள்ளு நிலவாழ் விதிற்கொடிய
வில்லாமை செய்யு மிடரா யிரமாமே
யெல்லா மறிந்தவுனக் கேதுரைப்பே னாதரிப்பாய்
அல்லாரும் பூங்குழலா யங்கயற்க ணம்பிகையே. (௨௩)

சந்தோட மாப்பலவுஞ் சாற்றுவா ரொன்றிரந்தா
லிந்தாவென் றீயா ரிகழ்வார் முகம்பாரார்
சிந்தா குலம்பலவுஞ் செய்யுமிடித் தீமையினை
அந்தோ பொறுத்தலரி தங்கயற்க ணம்பிகையே. [௨௪)

சுற்றுக்கோ டித்திரிந்து சொற்பாப் பலபாடி
விற்றுக்கோ வென்றலறி மெய்தளர்ந்து வாய்புலர்ந்து
பற்றுக்கோ டின்றிப் பரிதவித்துச் செல்வர்நகை
அற்றுக்கோ யிற்புகுந்தே னங்கயற்க ணம்பிகையே. (௨௫)

காடு மலையுங் கடலுங் கடந்துபொருள்
தேடும் படிபலநாட் சென்றுபல னின்றிமுகம்
வாடும் படிக்குவிதி வைத்தனையோ வன்பருளத்
தாடும் பசுமயிலே யங்கயற்க ணம்பிகையே. (௨௬)

மைந்தரங்கம் வாட மனைவாடக் கண்டுமனம்
வெந்தரங்கத் தீய மிடியாற் படுவேனோ
சுந்தரங்கண் டுள்ளுருகுஞ் சொக்கேசர் மிக்குமகிழ்
அந்தரங்கப் பெண்மணியே யங்கயற்க ணம்பிகையே. (௨௭)

வீணிற் பலபா விளம்பி யுலுத்தர்முகங்
கோணியரைக் காசு கொடுப்பினுங்கை யேற்றலைந்தேன்
பாணிமதி வேணிவைத்த பண்ணவர்தம் மார்பிலணி
ஆணிமுத்தே வேதவித்தே யங்கயற்க ணம்பிகையே. (௨௮)

பஞ்சத்திற் பிள்ளைவிற்கும் பான்மையெனப் பாடலெலாங்
கொஞ்சப் பொருட்குவிலை கூறிக் கொடுத்துழன்றேன்
நெஞ்சத் திருப்பாய் நினைவறிவா யின்னமுநான்
அஞ்சப் புரிவாயோ வங்கயற்க ணம்பிகையே. (௨௯)

சோற்றா லமைத்த சுவரா முடலொறுக்குங்
கூற்றா யினுமொருகாற் கொண்டு சகித்திடலாம்
நேற்றுவின் றுதினமு நேர்ந்து வதைக்குமிடி
ஆற்றா துனையடைந்தே னங்கயற்க ணம்பிகையே. (௩0)

தேளும் விடவரவுந் தீயுங் கொடுநோயு
நாளும் பொறுத்திடலா நல்குரவு தாங்கரிதே
மாளும் படிசெயினு மற்றதினன் றாமெனநீ
ஆளும் பரிசிதுவோ வங்கயற்க ணம்பிகையே. (௩௧)

ஈவார் புகழு மிரப்பா ரிகழுமுன்னோர்
பாவா லறிந்ததொன்றா பார்த்துமறிந் தேனிதினுஞ்
சாவா யிரமடங்கு தக்கதுநீ மிக்கதுணை
ஆவா யெனில்வாழ்வே னங்கயற்க ணம்பிகையே. (௩௨)

உற்றபொருள் வாரி யொழியவே முன்னிருந்த
சுற்றமும்போய்ப் பக்கத் துணையும்போய்ப் பன்னாளாக்
கற்றதும்போய்ப் பொங்குங் கவலைகொண்டு நீர்முழுதும்
அற்றகுள மொப்பானே னங்கயற்க ணம்பிகையே. (௩௩)

வாட்கொண்ட மைக்கண் மனைவிமக்கள் வார்த்தையெலாந்
தேட்கொண்டு கொட்டலெனச் செய்யுமகா பாவிமிடி
தாட்கொண்ட செங்கமலத் தாட்கொண்ட தாயேநீ
ஆட்கொண் டருள்புரிவா யங்கயற்க ணம்பிகையே. (௩௪)

மீளாக் கொடுநரக வேதனையும் வெம்முனைய
வாளாற் றுணிபடலும் வந்தாலுங் கொண்டுபல
நாளாச் சகிப்பேனோர் நாளேனு நல்குரவுக்
காளாக் குதல்சகியே னங்கயற்க ணம்பிகையே. (௩௫)

செஞ்சாலி யன்னந் திருந்துகறி யப்பவர்க்க
மெஞ்சாம லட்டிரப்பார்க் கீந்துண்டு நள்ளிரவில்
விஞ்சா யிரம்பேர் விருந்துவந்த போதுமுளம்
அஞ்சாத வாழ்வருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௩௬)

தேவரமு துண்டவர்கள் சேறுண்ணுந் தன்மையெனப்
பாவகத்தி லுன்புகழும் பாடிக் குலாமர்மிசை
நாவடித்த பாட னவிற்றுந் துயர்தவிர்ப்பாய்
ஆவலிது வென்னம்மா வங்கயற்க ணம்பிகையே. (௧௭)

சங்கையின்றி யேதுந் தருபவரா றென்றலைந்து
பங்கமுறச் செய்குடும்ப பாரமினித் தாங்கரிதே
நங்கையர் சிகாமணியே நாடுமடி யார்கண்முனம்
அங்கைநெல்லி யங்கனியே யங்கயற்க ணம்பிகையே. (௧௮)

செம்மையே யில்லாத் திருட்டு மனக்கயவர்
தம்மையே பாடுஞ் சழக்கொழிந்து வாழ்வேனோ
விம்மையே யன்றி யெழுமையினு நற்றுணையாம்
அம்மையே நீசரண மங்கயற்க ணம்பிகையே. (௧௯)

நித்தமுனைப் பாடியொரு நேரவுண வேபெறினும்
புத்தமுதாக் கொண்டுமகிழ் பூத்திடுவேன் பொன்படைத்த
மத்தர்களைப் பாடி வருங்கோடி பொன்னெனினும்
அத்தனையு நான்வேண்டே னங்கயற்க ணம்பிகையே. (௨௰)

இந்நா ளிரங்கா திருக்கின்றாய் மண்ணாசை
பொன்னாசை பெண்ணாசை பொய்யாசை யாய்க்கழிய
வென்னாவி யாக்கைவிடுத் தேங்கிப் பரிதவிக்கும்
அந்நாளும் வாராயோ வங்கயற்க ணம்பிகையே. (௨௧)

கஞ்சிகடை வாய்வழியக் கண்கள் சுழன்றிருண்டு
பஞ்சடைய யாக்கை பதற மொழிசோர
செஞ்சுலைய மூச்சடங்கு நேரத்தே மெய்யாதி
அஞ்சுமஞ்சும் போதருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௨௨)

தேடுவாய் போற்பலர்வாய்ச் சென்று கயவர்களைப்
பாடுவா யீதோ படுவா யெனுஞ்சமனார்
வீடுவா யென்று வெருட்டவெனை விட்டுவினை
யாடுவா யேற்சகியே னங்கயற்க ணம்பிகையே. (௨௩)

பன்னி பலபலவும் பன்னியழ மைந்தரெலாந்
துன்னியழச் சுற்றத்தார் சுற்றியழப் பற்றுவிட்டுத்
தன்னிலைகெட் டாவி தளரும் பொழுதழைப்பேன்
அந்நிமிடம் வந்தருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௨௪)

சாலஞ்செய் வார்போற் சமணா ரிமைப்பின்மணக்
கோலங் குலைந்துபிணக் கோலங் கொளப்புரிவார்
ஞாலந் துணையாமோ நற்றுணைநீ நம்பருண்ட
ஆலந் தடுத்தகையா யங்கயற்க ணம்பிகையே. (௪௫)

போச்சென்பார் சற்றே பொறுமென்பார் கொஞ்சமுண்டு
மூச்சென்பா ரில்லை முடிந்ததென்பா ரென்னவினிப்
பேச்சென்பார் சூழ்வார் பெருங்குடும்ப மிப்படியா
ஆச்சென்பார் நீசரண மங்கயற்க ணம்பிகையே. (௪௬)

மோட்டெருமைக் கோட்டிலெனை முட்டவிட்டுத் தீநரகிற்
போட்டுப் புரட்டிப் பொறுக்கமுடி யாத்துயரங்
கூட்டிச் சமன்றூதர் கூடிக் குரங்காட்டம்
ஆட்டுவரா மேதுசெய்வே னங்கயற்க ணம்பிகையே. (௪௭)

இங்கு மிடிபிணியா லேங்கினேன் கூற்றுவனார்
பொங்கிக் கொடும்பாசம் போட்டிழுத்துக் கொண்டேகி
வெங்கணர கிற்கொடிய வேதனையுண் டாக்குவராம்
அங்குமுனை யேயழைப்பே னங்கயற்க ணம்பிகையே. (௪௮)

வெப்போடு விக்கலெழு மெய்சோரப் பெண்களெலா
மொப்பாரி வைக்க வுயிர்கொள்ளுங் கூற்றுவனார்
தப்பா தறக்கொடிய தண்டனைகள் செய்குவராம்
அப்போ துனையழைப்பே னங்கயற்க ணம்பிகையே. (௪௯)

காரேயு மேதி கடவிச் சமன்றூதர்
நேரேவந் தென்னை நிரயத்தி லிட்டுவதைப்
பாரேயென் றாவி படுந்துயரம் பார்த்திரங்கி
ஆரோ துணைபுரிவா ரங்கயற்க ணம்பிகையே. (௫௦)

பற்கழன்று கண்ணிருண்டு பஞ்சடைந்து காறளர்ந்து
சொற்குழம்பி மேனி துவண்டசைந்து தள்ளாடி
நிற்குநிலை கண்டுமுட னிற்குமென வெண்ணுவதே
அற்குழைந்து வார்கூந்த லங்கயற்க ணம்பிகையே. (௫௧)

திக்களவுஞ் செங்கோல் செலுத்தினருந் தென்றிசைக்கோன்
புக்கவுடன் பல்பொருளும் போட்டுவிட்டுப் போவாரே
மிக்கதிற லாளியெனை விட்டகலான் பட்டழுவேன்
அக்கணநீ வந்தருளா யங்கயற்க ணம்பிகையே. (௫௨)

வெம்போர் மறலிவரும் வேளை விழிகலங்கி
வம்போதி டாது வணங்காது மாழ்காது
சம்போ மகாதேவ சங்கரவென் றோதவைப்பாய்
அம்போ ருகமுகத்தா யங்கயற்க ணம்பிகையே. (௫௩)

நாடு நகருமிக நட்டவருங் கிட்டவந்து
கூடு முறவினருங் கொள்ளிவைத்துச் செல்லுவரோ
வாடும் படிமறலி வந்தடும்போ தேதுசெய்வேன்
ஆடும் பசுமயிலே யங்கயற்க ணம்பிகையே. (௫௪)

கூபத்து மண்டூகக் கொள்கையெனப் பொய்க்குடும்ப
லாபத்தை மெய்யாக நம்பிவெகு நாட்கெடுத்தேன்
தீபத்து விட்டிலொத்தேன் சீறி மறலிபுரி
ஆபத்துக் கேதுசெய்வே னங்கயற்க ணம்பிகையே. (௫௫)

முன்னைவினை முற்றிவந்து மூண்டாலு நிற்பணிந்த
பின்னரெனைப் பற்றப் பெறுமோ கருமேதி
மன்னவனுக் கென்பாலோர் மாற்றமுமுண் டோபுகல்வாய்
அன்னநடை மின்னனிடை யங்கயற்க ணம்பிகையே. (௫௬)

மங்கையர்கள் வீடுமட்டே மாந்தரெலாங் காடுமட்டே
யெங்குமுடன் சேர்வதுன தின்னருளே யென்றறியேன்
பங்கவினை நீக்குபெரும் பாக்கியமுண் டாக்குவையோ
அங்கனையர் நாயகமே யங்கயற்க ணம்பிகையே. (௫௭)

என்பாச முள்ளிறுக்க வேமபடர் கைப்பாசம்
வன்பாப் புறமிழுக்க மத்திநின்று தட்டழிவேன்
முன்பார் வருவர்பெரு மோசத்துக் காளாவேன்
அன்பானீ வந்தருளா யங்கயற்க ணம்பிகையே. (௫௮)

எத்துவது செல்லாதா மேமபடர் பொல்லாராங்
கத்துவது கொள்ளாராங் கைச்சூல முள்ளாராங்
குத்துவராம் வெட்டுவராங் கொல்லுவராம் வல்லவராம்
அத்தருணம் வந்துதவா யங்கயற்க ணம்பிகையே. (௫௯)

எங்கோடி யெய்த்தாலு மெக்காவல் வைத்தாலுஞ்
செங்கோற் கடவுள்வந்து சேர்வதுதா னிச்சயமே
யிங்கோர் துணையுமிலை யேழையேற் குள்ளிரங்கி
அங்கோடி வந்தருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௬0)

பாதாதி கேசம்வரை பார்த்துப்பார்த் துள்ளுருகி
யோதா துணரா துளநாள் வரைகெடுத்தே
னேதா கினுஞ்சற் றிரங்காயோ நாயேனுக்
காதாரம் வேறிலையே யங்கயற்க ணம்பிகையே. (௰௧)

பன்மலராற் பச்சிலையாற் பாரி லுதிர்சருகாற்
சொன்மலரா லுன்னைத் தொழும்பேறு பெற்றிலனே
கன்மமெலா நீக்கியெனைக் காப்பாயோ காவாயோ
அன்மலிந்து வார்கூந்த லங்கயற்க ணம்பிகையே. (௰௨)

கோயில்வலஞ் சுற்றுகிலேன் கும்பிடேன் கூத்தாடேன்
வாயிலுனை யேத்தி வழுத்தேன் கொழுத்தேனுன்
நாயினுங்கீ ழாகி நலிவேன் மெலிவேனை
ஆயினுநீ காத்திடுவா யங்கயற்க ணம்பிகையே. (௰௩)

பூவா லலங்கரித்துப் போற்றிசய போற்றியென்று
நாவா லுனைத்துதிக்கு நற்றவநான் பெற்றிலனே
தேவாதி தேவன் திருவுளத்துத் தெள்ளமிர்தம்
ஆவாய் திருமதுரை யங்கயற்க ணம்பிகையே. (௰௪)

புத்தமுதோ கூழோ புசிக்குமுன முன்னையெண்ணிப்
பத்தியுட னைவேத்யம் பண்ணியுண்ணப் பெற்றிலனே
சித்தமிரங் கிக்கருணை செய்தெனையுங் காப்பாயோ
அத்தரிடப் பாலுறையு மங்கயற்க ணம்பிகையே. (௰௫)

பள்ளமுறுந் தீம்புனல்போற் பத்தியுட னின்கோயிற்
குள்ளடையேன் கோபுரங்கண் டோகையுடன் கைகுவியேன்
கள்ளவினை யத்தனையுங் கைக்கொண்டே னேதுசெய்வேன்
அள்ளல்வயற் றென்மதுரை யங்கயற்க ணம்பிகையே. (௰௬)

சோதிவிளக் குத்திரியைத் தூண்டேன் றரைதூகே
னேதுமுழ வார மியற்றே னினிதாடி
வீதிவலஞ் சூழேன் மெழுகேறு னேன்பிறந்தேன்
ஆதியந்த மில்லாத வங்கயற்க ணம்பிகையே. (௰௭)

பொற்றா மரையிலொரு போதும் புனலாடேன்
நற்றாள் பணியே னறுந்தார் தொடுத்தணியேன்
வெற்றா வாரமிடு வீணனினி யேதுசெய்வேன்
அற்றார்க் கினிதருளு மங்கயற்க ணம்பிகையே. (௰௮)

வையைநதி சென்று மகிழ்ந்துமுழு கேன்பூதி
கையிலெடுத் துக்குழைத்துக் காதலுடன் பூசுகிலேன்
மெய்யினுய ரக்கமணி மேவுகிலேன் பாவியினி
ஐயையோ வேதுசெய்வே னங்கயற்க ணம்பிகையே. (௬௯)

பன்னிரண்டு மாசமுமுன் பத்தர்விழாக் கொண்டாட
வென்னிரண்டு கண்களிக்க வேலைழதரி சித்திலனே
வெந்நரகுக் காளாகி வீவேனோ நின்கருணைக்
கன்னியனு மாவேனோ வங்கயற்க ணம்பிகையே. (௭௦)

பூரணசந் திரோதயமே போலுந் திருமுகஞ்
சீரணவும் புன்னகையுஞ் செவ்வாயுங் கைம்மலரு
நாரணியும் வந்துபணி நற்றாளுங் காண்பேனோ
ஆரணமுங் காண்பரிய வங்கயற்க ணம்பிகையே. (௭௧)

தாயுஞ் சலிப்படையத் தந்தை யருவருக்கச்
சேயும் புறக்கணிப்பச் செய்யுங் கபமாதி
நோயுமொரு பாயுமுற்று நொந்துபடு மவ்வேளை
ஆயுந் துணையறியே னங்கயற்க ணம்பிகையே. (௭௨)

ஊழிச் சுடுநெருப்பை யொத்த பிறப்பிறப்பிற்
பாழிற் கிடந்து படுவேன் கெடுவேனோ
வீழிக் கனிவாய் விமலாய் திரையெறியும்
ஆழித் துரும்பானே னங்கயற்க ணம்பிகையே. (௭௩)

பிட்டுண்ண நாடிப் பிறைமுடிமேன் மண்கூடை
கொட்டுண்ண வந்தவர்க்குக் கோல்கொடுத்த கோமகளே
யிட்டுண்ண வேண்டி யினிய பலகறிசோ
றட்டுண்ணும் வாழ்வருள்வா யங்கயற்க ணம்பிகையே. (௭௪)

எல்லார்க்கு முன்கருணை யீகின்ற தாயானாய்
பொல்லாக் கொடியேன் புறம்பா யழிவேனோ
செல்லார்க்குங் கூந்தன்மகா தேவியே பாவியுனை
அல்லாற் கதிகாணே னங்கயற்க ணம்பிகையே. (௭௫)

உன்பாதம் போற்றும லோடோடி நாடனைத்து
மென்பாத மெட்டிநடந் தேதும் பலனறியேன்
துன்பா கரமானேன் சொல்லுவதொன் றில்லையுண்மை
அன்பாள ருள்ளுறையு மங்கயற்க ணம்பிகையே. (௭௬)

## அங்கயற்கண்ணம்பிகை கோச்சகக்கலிப்பா

பொய்யோ கொலையோ புலையோ புகலாமற்
செய்யாமற் சேராமற் செந்நெறியிற் செல்லவைப்பாய்
வெய்யோ ருறவு விநாடிப் பொழுதேனும்
ஐயோ சகித்தலரி தங்கயற்க ணம்பிகையே. (எஎ)

செம்பா விரும்பாற் செயப்படினுந் தீயிலிட்டா
லம்பா யுருகு மகமுருகக் காணேனே
வெம்பா தகநோய் விலக்கியருள் காரணைய
ஐம்பா லியன்மணங்கூ ரங்கயற்க ணம்பிகையே. (எஅ)

கல்லு முருக்குங் கரைந்துருகும் பாவிமன
வல்லிரும்பு சற்றுருக மாட்டாது கேட்டாயோ
சொல்லுவதென் னம்மா துயரனுகா மற்பகலும்
அல்லுமுனைப் போற்றவைப்பா யங்கயற்க ணம்பிகையே. (எகூ)

சீரியலு நின்பாத சேவைவிட்டு வீண்குடும்பக்
காரியஞ்செய் தாவி கரையக்கடவேனோ
நேரியலு நின்கருணை நீர்மையிதோ தீந்தமிழும்
ஆரியமும் வாழ்கூட லங்கயற்க ணம்பிகையே. (அ0)

செக்கர்மலர்த் தாள்சேர் சிறப்பன்றித் தேவர்க்க
மிக்கதென்று மாந்தர்க்க மிக்கதென்றுங் கூறலெலா
மிக்கரையி னின்றுவிழி யேறிட்டுப் பார்த்தபொழு
தக்கரையிற் பச்சையன்றோ வங்கயற்க ணம்பிகையே. (அக)

பத்துவித மெட்டுவிதம் பாடலாம் பாடலெலாங்
கத்துவித மன்றிக் கனியும்விதங் கண்டிலனே
யெத்துவிதஞ் செய்துநின்னை யெய்க்கும்விதங் கூடுவதோ
அத்துவிதத் துட்பொருளே யங்கயற்க ணம்பிகையே. (அஉ)

விண்டுபத மேதரினும் வெம்பியுயிர் கொன்றலைக்குங்
கண்டகர்தஞ் சேர்க்கை கனவினிலும் வேண்டேனே
தண்டமிழ்முன் செய்தவத்தாற் றையலரா சாய்மேலை
அண்டர்தொழ வாழ்கூட லங்கயற்க ணம்பிகையே. (அங)

வட்டியென்றும் வேறுவரு வாயென்றும் பேய்போலத்
தட்டழிவ தல்லாது தக்கநிதி சேர்ந்திலதே
மட்டலவு நின்றாண் மலர்நினைப்போர்க் கெப்பொருளும்
அட்டியின்றி வந்தடுக்கு மங்கயற்க ணம்பிகையே. (அச)

ஓடிச் சுழலு முலையுங் குலையுநிதி
தேடித் திரியுநிலை சேராதென் சிந்தையரா
வேடிக்கை யாகவிட வெவ்வரவும் பையைவிரித்
தாடிக் குடத்தடங்கு மங்கயற்க ணம்பிகையே. (அரு)

புற்புதமாம் யாக்கை பொருளரசு மக்கண்மனை
சொற்பனமா மென்று துறந்துவிடு நாளெதுவோ
கற்பவரை கொண்டு களிக்கவரி னுங்குடும்பத்
தற்பசுகம் வேண்டுகிலே னங்கயற்க ணம்பிகையே. (அசா)

சாகா வரம்பெறினுந் தண்கமல வாழ்வுறினும்
பாகார் மொழித்திருவைப் பற்றிவாழ் வுற்றாலும்
போகாப் பழிகொடுக்கும் பொய்கூறி மெய்வளர்த்தல்
ஆகா தொருபோது மங்கயற்க ணம்பிகையே. (அஎ)

காவலிலா மற்செங் கனகமணிப் பூணுடை
பூவுலகி லெய்தாப் பொருள்கள்பல வுற்றாலுந்
தாவி யெழுந்தோடித் தானடைய வேண்டுமென
ஆவலுறா வாழ்வருள்வா யங்கயற்க ணம்பிகையே. (அஅ)

புல்லொழுக்க மத்தனையும் போக்கி யறிஞர்புகல்
நல்லொழுக்க மெல்லா நயக்குமுள நல்காயோ
வில்லொழுக்கு நன்னுதலாய் வெண்முத்தப் புன்னகையாய்
அல்லொழுக்குந் தாழ்குழலா யங்கயற்க ணம்பிகையே. (அகூ)

போதுமென வெண்ணாது பொன்னாசை பொங்கியெழத்
தீதுசெயு நெஞ்சைச் சிறைக்கு ளகப்படுத்தி
யேதுபொருட் பெற்றாலு மில்லையெனச் சொல்லிவரும்
ஆதுலர்க்கீந் துண்ணவைப்பா யங்கயற்க ணம்பிகையே. (கூ0)

கல்லைக் கனியாக்குங் காரியம்போ லென்னுளக்கல்
வல்லை யுருகும் வகையொன்று செய்யாயோ
தொல்லைமறை யாகமங்கள் சுட்டுபொரு ளத்தனையும்
அல்லையெனச் சொல்லநின்றா யங்கயற்க ணம்பிகையே. (கூக)

ஏங்காம லோடி யிரவாம லன்பர்குழா
நீங்காமல் வெய்யவினை நேராம லுய்வேனோ
ஓங்காரத் துட்பொருளே யுன்கருணை நாயேன்பால்
ஆங்கால முண்டோசொ லங்கயற்க ணம்பிகையே. (கூஉ)

தூண்டிலுறு மீன்போலத் தோகையர்பா லோகையுற
வேண்டியடுத் தாவி விளியா தருளாயோ
பாண்டியனார் நற்றவப்பூம் பாவாய் புனல்வேணி
ஆண்டியர சாளவைத்த வங்கயற்க ணம்பிகையே. (௯௩)

இச்சடமும் பல்பொருளு மென்றுநிலை யென்றுளத்தில்
வைச்சடையுஞ் சிற்றின்ப வாழ்வாற் களிப்பதுவோ
பிச்சொழிந்து நின்னடியைப் பேணுதார் வாழ்வனைத்தும்
அச்சொடிந்த தேரலவோ வங்கயற்க ணம்பிகையே. (௯௪)

பன்னரிய நீதி பலபலவுஞ் சொற்றிடலாந்
தன்னடையிற் சொன்னபடி சாதித் திடலரிதே
லென்னபயன் வெற்றொலியா மென்பதுன்னி யெய்தேனே
அன்னவயற் றென்மதுரை யங்கயற்க ணம்பிகையே. (௯௫)

துள்ளி யெழுந்து சுழலு மெளியனுளங்
கொள்ளி பிடித்த குரங்கா மெதுபுரிவேன்
கள்ளிழியும் பூங்கொன்றைக் கண்ணியெந்தை கண்கள்புகுந்
தள்ளியுணும் பெண்ணமுதே யங்கயற்க ணம்பிகையே. (௯௬)

கூடலிலே வந்து குடியிருந்து முன்புகழைப்
பாடறியேன் பாதம் பணிந்தறியே னுய்குவனே
வாடலுறாப் பூமாலை மங்கையர்கள் பாடலுடன்
ஆடலறாச் சந்நிதியா யங்கயற்க ணம்பிகையே. (௯௭)

ஏறாத மேட்டுக் கிறைப்பதுபோ லீனரிடங்
கூறா தனகூறிக் கொண்டலைந்த பாவியென்று
சீறாது தண்கருணை செய்யாயே லேழைகண்ணீர்
ஆறாய்ப் பெருகுமம்மே யங்கயற்க ணம்பிகையே. (௯௮)

நஞ்சுமமு தாமுரிய நல்வினையா லல்வினையால்
விஞ்சு மமுதும் விடமாகு மென்றுரைப்பார்
தஞ்சமென நெஞ்சுருகிச் சாற்றுமொழி யேற்றருளாய்
அஞ்சுவனப் பைங்கிளியே யங்கயற்க ணம்பிகையே. (௯௯)

சென்னி மணிமகுடச் சீர்வாழி தார்வாழி
புன்னகையும் வாழிசெழும் போதார் கழல்வாழி
மன்னு பெருங்கருணை வாழி யுலகீன்ற
அன்னை தமிழ்வாழி யங்கயற்க ணம்பிகையே. (௧00)

கோச்சகக்கலிப்பா முற்றிற்று.



உ

குமரன்றுணை.

# மதுரைச் சிலேடை வெண்பா.

காப்பு.

மதுரைக் குயின்மொழியாள் வாமத்தார் மீது
மதுரைச் சிலேடைவெண்பா மாலைத்—துதிபுகலச்
சித்தி விநாயகனற் செந்தா மரைமலர்த்தாள்
புத்தியுறக் கொள்வேனிப் போது.

நூல்.

பூவிசைதேம் பொய்கையுமம் போருகமும் வீரர்களு
மாவிசைய மேவு மதுரையே—நாவிசையுஞ்
பாவைக் களிப்பாரோர் பாதியா கஞ்சயிலப்
பாவைக் களிப்பார் பதி.

1. மா இசை அம் - வண்டுகளின் இசையும் அழகும். 2. மா இசைய - இலக்குமி பொருந்த. 3. மா விசையம் - பெரிய வெற்றி. (க)

நேரிழையார் சீருருவு நீர்மலிந்த வாவிகளும்
வாரிசமா னங்கொண் மதுரையே—பாரிலுகும்
பிட்டுக் குவந்தார் பிரம்போச்சக் கூடைமண்
கொட்டுக் குவந்தார் குடி.

1. வாரிச மான் அம் - தாமரையிலிருக்கும் இலக்குமியின் அழகு. 2. வாரி சமானம் - கடல் உவமை. (உ)

செந்தமிழோர் செல்வரில்லிற் செல்வர்மலர்த் தண்டலையில்
வந்துவந்து கொள்ளு மதுரையே—முந்துமனல்
பொங்கத் திருந்தார் புரமெரித்தார் மூன்றுதமிழ்ச்
சங்கத் திருந்தார் தலம்.

1. வந்து வந்து கொள்ளும் - பலகால் வந்து (கொடை) பெறும். 2. வந்து உவந்து - தென்றலை மகிழ்ந்து. (ங)

மண்டுபுனற் பொய்கைகளின் மாலைமலர்த் தண்டலையில்
வண்டரங்கங் கோடு மதுரையே—தண்டேங்
கடுக்கை யணியார் கரித்தோல் புலித்தோ
லுடுக்கை யணியார்தம் மூர்.

1. வண் தரங்கம் கோடும் - மிக்க அலைகள் வளையும்; 2. வண்டர் அங்கங்கு ஓடும் - வண்டுகள் அவ்வவ்விடங்களில் ஓடும். (ச)

செட்டுச் செய் வார்நிதியுஞ் சேயிழையார் மென்மொழியும்
வட்டிக்கு வேண்டா மதுரையே—பிட்டுக்கு
மிக்க விருப்பார் விழைவா ரகத்தமுத
மொக்க விருப்பார்தம் மூர்.

1. வட்டிக்கு வேண்டா - வட்டி இலாபந்தரும் கடனைவிரும்பாத, 2. வட்டு இக்கு வேண்டா - வெல்லக்கட்டியையும் கரும்பையும் விரும்பாத. (ரு)

சந்ததமன் பர்க்கெவருஞ் சார்கின்ற காமுகர்க்கும்
வந்தனஞ் செய்யு மதுரையே—முந்து
பரநா டகத்தார் பரவவருள் செய்யும்
வரநா டகத்தார் மனை.

1. வந்தனம் செய்யும் - வணக்கம் செய்யும். 2. வந்தன் அஞ்சு எய்யும் - தென்றற்றேருடைய மதன் ஐந்து பாணங்களை எய்யும். (சு)

காலடக்கும் யோகியரெக் காலமும் பாகர்களும்
வாலிபத்தை மேவு மதுரையே—யாலமதாற்
கண்டங் கரியார் கமலன்மால் காணுதற்குப்
பண்டங் கரியார் பதி.

1. வாலிபத்தை - இளமையை. 2. வால் இபத்தை - அழகிய யானையை. (எ)

கானப் பொழிற்கோடுங் கஞ்சப்பொய் கைக்கோடும்
வானத் துலாவு மதுரையே—யீனனங்கம்
வெட்டிக் களித்தார் வியன்முலைப் பால்பன்றிக்
குட்டிக் களித்தார் குடி.

1. வானத்து உலாவும் - ஆகாயத்தில் உலாவும். 2. வால் நத்து உலாவும் - வெள்ளிய சங்குகள் திரியும். (அ)

ஏற்றூர்க்கி வார்கொடையு மேழுயர்கைம் மாபடையு
மாற்றாரை வெல்லு மதுரையே—போற்றுகற்ப
தாருவரை வில்லார் தமனியமெல் லாந்திரண்ட
மேருவரை வில்லார் விருப்பு.

1. மால் தாரை - மேகத்தின் மழைத்தாரையை. 2. மாற்றாரை - பகைவரை. (௯)

விஞ்சுமின்னார் கண்ணிணையு மேமேலார் மனநெறியும்
வஞ்சத்தை மேவா மதுரையே—யஞ்சுவினை
சிங்கக் குழையார் செறிவடையார் வெள்ளொளிய
சங்கக் குழையார் தலம்.

1. வஞ்சம் - வாள். 2. வஞ்சம் - வஞ்சகம். (௰)

கண்டார்சொல் லார்கைதும்பிக் கைபொய்கை கோகனகம்
வண்டான மேவு மதுரையே—பண்டைவினைப்
பந்திப் பரியார் பணிக்கிரங்கிக் கூட்டுநரிப்
பந்திப் பரியார் பதி.

1. கண்டு ஆர் சொல்லார் கை, வண்டான் அம்மேவும் - கற்கண்டுபோலும் சொல்லையுடைய பெண்களின் கைகள், வளையல்களால் அழகு பெறும். 2. தும்பிக்கை, வண் தான மேவும் - யானைத்துதிக்கை, மிக்க மதம் பொருந்தும். 3. பொய்கை, வண்டானம் மேவும் - வாவிகளில் நாரைகள் பொருந்தும். 4. கோகனகம், வண்டு ஆன மேவும் - தாமரை வண்டுகள் நிலைகொள்ளப் பொருந்தும். (௧௧)

காய்க்குமரக் காவார் கழுநியுங்கற் றோர்கவியும்
வாய்க்குமது ரஞ்சேர் மதுரையே—நோய்க்குளியான்
வாடப் புரியார் மலரடியீ வார்சடைமே
லோடப் புரியார்தம் மூர்.

1. வாய்க்கும் மது உரம் சேர் - பொருந்திய தேனுக்கிய உரம் சேரும். 2. வாய்க்கு மதுரஞ்சேர் - (படிப்பதற்கு) வாய்க்கு இனிமை பொருந்தும். (௧௨)

ஏற்குமொளி யோர்க்குமியலுணர்ந்தோர் செய்கைக்கும்
வாக்குமனை நீர்சேர் மதுரையே—நீக்கொள்கொடு
நஞ்சப் பணியாரெந் நாளுமெளி யென்பிணியா
லஞ்சப் பணியா ரகம்.

1. வார்க்கும் அனம் நீர் - வார்க்கின்ற அன்னமும் நீரும். 2. வாக்குமனை நீர் - வாக்குடன் மனத்தன்மையும். (௧௩)

பந்துவுக்கின் பும்மழைக்குப் பண்சா தகமுநல்லார்
வந்தழைத்தங் காக்கு மதுரையே—மைந்தனுடல்
பண்டங் கறுத்தார் பழவினைநீத் தாட்கொண்டார்
கண்டங் கறுத்தார் கலப்பு.

1. நல்லார் வந்து அழைத்து அங்கு ஆக்கும் - பெண்கள் வந்து அழைத்துச் சென்று அங்கே செய்யும். 2. நல் ஆர்வம் தழைத்து அங்காக்கும் - நல்ல ஆசை மிக்கு வாய்திறக்கும். (கச)

போதுமலர்க் கானகமும் போர்வயவர் செங்கரமு
மாதவரை யேயு மதுரையே—நீதுநல
மாகத் திருத்தினா ராண்டா ரெனையுமையைப்
பாகத் திருத்தினார் பற்று.

1. மாதவரை - பெரிய தவசிகளை. 2. மா தவரை - அழகிய வில்லை. (கரு)

விஞ்சு விரகமின்னார் மெய்யுமணி மேடைகளு
மஞ்சங் கடுக்கு மதுரையே—யஞ்சியமூந்
தாதுலரா வந்தார்க்கோ தைக்கிரங்கி மைந்தனுக்கு
மாதுலரா வந்தார் மனை.

1. மஞ்சம் கடுக்கும் - படுக்கையை சினக்கும். 2. மஞ்சு அங்கு அடுக்கும் - மேகம் அங்கே அடுத்திருக்கும். (கசு)

சேருந் துணைவருள்ளுஞ் செந்நெற் கழனியுள்ளும்
வாரம் புலரா மதுரையே—நேருடல
மஞ்சா னனத்தான் வலாரி புலவர்பணி
யஞ்சா னனத்தா னகம்.

1. வாரம் புலரா - அன்பு வாடாத. 2. வார் அம்பு உலரா - கட்டிய நீர் வறளாத. (கஎ)

ஊனம் பொருவீரர்க் குர்பொன்னார் மைவிழிக்கு
மானந் தழைக்கு மதுரையே—வானமருங்
கங்கா தரரானார் கையா ருமைமயிலொரு
பங்கா தரரானார் பற்று.

1. மானம் தழைக்கும் - பெருமை சிறக்கும். 2. மான் அம் தழைக்கும் - மானின் அழகு மிகும். (கஅ)

விண்டலமுற் றூர்செவியும் வேதிரோ மப்புகையும்
வண்டிசையெட் டுங்கான் மதுரையே—தொண்டருளந்
தொக்க விருப்பார் துதிக்குந் தமிழ்ப்பாட்டின்
மிக்க விருப்பார் விழைவு.

1. வண்டு இசை எட்டும் கான் - வண்டுகளின் இராகம் எட்டுகின்ற சோலை சூழ்ந்த. 2. வண் திசை எட்டும் கால் - பெரிய எட்டுத்திசைகளிலும் வீசும். (க௯)

ஏணைக்கும் பேரவையு மின்றமிழ்க்கல் லூரிகளு
மாணாக்கர் மேவு மதுரையே—சேணாருந்
தாருகவ னத்தார் தருக்கொழித்தார் செவ்வியவம்
போருகவ னத்தார் புரி.

1. மாண் நாக்கர் - மாட்சியுற்ற நாவலர். 2. மாணாக்கர் - கற்பவர். (உ0)

தோரணமும் வீதிகளுஞ் செய்வரம்பும் வேள்கரமும்
வாரண முலாவு மதுரையே—பாரிடையோ
ராசை யுடையா ரகமடையார் தாமோரெட்
டாசை யுடையா ரகம்.

1. வாரணம் யானை. 2. வாரணம் - சங்கு. 3. வாரணம் - சேவல். (உக)

கொல்லியற்போர் வீரர்களுங் கோயிலிற்கா லந்தோறும்
வல்லியமேற் பொங்கு மதுரையே—புல்லர்
பயிலாய முள்ளார் பணிதிரண்ட தேய்க்குங்
கயிலாய முள்ளார் கலப்பு.

1. வல்லியம் மேற்பொங்கும் - புலிகளினுமதிகமாகப் பொங்கியெழும். 2. வல் இயம் மேற்பொங்கும் - வலிய வாத்தியங்கள் மிக்கொலிக்கும். (உஉ)

காய்ப்புமிகு மாம்பொழிலுங் கன்னியர்கண் மாமுகமும்
வாய்ப்பவள மெய்து மதுரையே—நோய்ப்பாடு
தள்ளியம்ப லத்தாற் றழைக்கவெனக் கிங்கருள்வார்
வெள்ளியம்ப லத்தார் விருப்பு.

1. வாய்ப்ப வளம் - பொருந்த வளங்கள். 2. வாய்ப் பவளம் - வாயாகிய பவளம். (உங)

மாசற்ற யோகியரு மாண்கல்வி கற்பவரும்
வாசிப் பலங்கொண் மதுரையே—யானையுட
னேதப் பரியா ருணர்வுக் கரியார்நால்
வேதப் பரியார் விருப்பு.

1. வாசிப் பலம் - வாசியின் (சுவாசத்தின்) பயனை. 2. வாசிப்பு அலம் - கற்றலின் அமைதி. (உசு)

கானக் கிளிமுழக்குங் கன்மா ளிகையுமின்னார்
வானகத்தை நேரு மதுரையே—மேனிலைய
மாகத் துமையார் வனச்சடையார் தம்வாம
பாகத் துமையார் பதி.

1. மின்னார் வாள் நகத்தை நேரும் - பெண்களின் சுத்தமான (விரல்) நகங்களை யொக்கும். 2. மின் ஆர் வான் அகத்தை நேரும் - மின்னல் பொருந்திய மேகத்திலிடத்தைச் சேரும். (உரு)

கோட்டாமெய் மன்னர்களுங் கோமறுகிற் பாகர்களும்
வாட்டானை கைக்கொண் மதுரையே—கோட்டானை
போதத் துவைத்தார் புகலருந்தம் பண்புதமிழ்
வேதத் துவைத்தார் விருப்பு.

1. வாள்தானை - வாட்படை. 2. வாட்டு ஆனை - பிணக்கும் யானையை.(உசு)

புந்திப்பா லன்புகொண்டு பூசுரரு மீசுரரும்
வந்திப்பார் மேவு மதுரையே—சிந்தைநொந்து
சாகவதி யாற்றார் தளர்ந்துழைக்க வந்தருள்வார்
வேகவதி யாற்றார் விருப்பு.

1. வந்திப்பார் மேவும் - வணங்குபவராகப் பொருந்தும். 2. வந்து இப் பார்மேவும் - வந்து இப் பூவுலகைச் சேரும். (உஎ)

கோனுரிமை மைந்தர்களுங் கூடமைச்ச ருஞ்செல்வி
மானமிசை மேவு மதுரையே—வானீர்
மடுக்கச் சடையார வைத்தார் கருணை
கொடுக்கச் சடையார் குடி.

1. செல்விமான மிசை மேவும் - (விரைந்து) செல்கின்ற விமானங்களின் மீது சேரும். 2. செல்வி - மானம் இசை மேவும் - இலக்குமியும் பெருமையும் கீர்த்தியும் பொருந்தும். (உஅ)

சீரிற் பொலிகலிக்குச் செல்வருமின் னூர்மொழியும்
வாரிக் கொடுக்கு மதுரையே—கூரமைந்த
சூலக் கரத்தார் துடியுடையா ரொன்றுசேர்
நாலக் கரத்தார் நகர்.

1. வாரிக் கொடுக்கும் - அள்ளித்தரும். 2. வார் இக்கு ஒடுக்கும் - பெரிய கரும்பை அடக்கும். (௨௯)

தேசம் பலவிதியாற் செல்பவர்மின் னூர்குழலால்
வாச முகக்கு மதுரையே—யாசையுடைச்
சுற்று மறையார் தொழுவார் பவமறுக்கும்
பொற்று மறையார் புரி.

1. வாசம் உகக்கும் - வசித்தலை விரும்பும். 2. வாசம் முகக்கும் - மணத்தை முகக்கும். (௩௰)

போதெங்கும் வாணம் புகுமனைக ளுந்தெருவு
மாதங்க மேவு மதுரையே—யோதுங்
கணிச்சிப் படையார் கனிந்துருகிப் போற்றார்
கணிச்சிப் படையார்தங் காப்பு.

1. போதெங்கும், மா தங்க மேவும் - மலர்களிலெல்லாம் வண்டுகள் தங்கப்பெறும். 2. மனைகளும், மா தங்கம் மேவும் - வீடுகளும், பெரிய பொற்குவியல் சேரும். 3. தெருவும், மாதங்கம் மேவும் - தெருக்களும் யானைகளைப் பொருந்தும். (௩௧)

கானம் பயிலுமின்னூர் கண்டமுந் தண்டலையும்
வானந் தடுக்கு மதுரையே—மேனின்று
வந்திரவி மாணத்தார் வாய்ந்தா யிரங்கதிர்கொ
ளிந்திரவி மானத்தா ரில்.

1. வால் நந்து அடுக்கும் - வெள்ளிய சங்கை ஒக்கும். 2. வானம் தடுக்கும் - ஆகாயத்தை முட்டும். (௩௨)

வீங்குபுனற் பொய்கை வியன்கரையும் வீரர்களும்
வாங்குதிரை யேறு மதுரையே—பாங்குறியா
வினைக் கொடியா ரிடத்திரவா தெற்புரக்கு
மீனக் கொடியார் விருப்பு.

1. வாங்கு திரை யேறும் - வளைந்த அலைகள் மேற்சேரும். 2. வாம் குதிரையேறும் - தாவிச்செல்லும் குதிரைகளிலேறும். (௩௩)

அள்ளப் பெறுமெழிலா ரஞ்சனக்கண் ணுஞ்சொல்லும்
வள்ளப்பா லாகு மதுரையே—கள்ளவிழ்பூங்
கோலத் திருக்கழலார் கூடார் புரம்பொடித்தார்
பாலத் திருக்கழலார் பற்று.

1. வள் அப்பால் ஆகும் - கூரிய அம்பால் ஆகும். 2. வள்ளப் பால் ஆகும்-கிண்ணத்தில் வைத்த பாலை யொக்கும். (௬௪)

பூகம் பொழிலும் புராணதி கற்பவரு
மாகம் பயிலு மதுரையே—நோகு
மெனையார வைப்பா விலங்குவிப்பார் பாக
மனையார வைப்பார் மனை.

1. மாகம் - ஆகாயம். 2. மாகம் - மாககாவியம். (௬௫)

செஞ்சொற் புலவரிடஞ் செல்வருநீர் பெய்முகிலு
மஞ்சரிவண் ணங்கொண் மதுரையே—நஞ்சங்
களத்திருத்தி யுள்ளாரைக் காய்ந்தாரென் பாட்டி
லுளத்திருத்தி யுள்ளா ருவப்பு.

1. மஞ்சரி வண்ணம் - மஞ்சரி வண்ணம் என்ற நூல்களை. 2. மஞ்சு அரி வண்ணம் - அழகிய விட்டுணு நிறத்தை (கருமையை). (௬௬)

புஞ்சமலர்த் தேம்பொழிலும் பூவையரோ டாடவரு
மஞ்சுவகை மேவு மதுரையே—வஞ்சத்
தொடக்கறப் பார்களத்தர் துள்ளிவருங் காணம்
படக்கறுப் பார்களத்தர் பற்று.

1. மஞ்சு வகை - மேகவகைகள். மஞ்சு உவகை - அழகும் மகிழ்வும். (௬௭)

மங்கையர்கள் வார்குழலு மாதவஞ்செய் வாரகமு
மங்குலக மேயா மதுரையே—பொங்கும்
வயிரா வணத்தார வாரமிட வேறும்
அயிரா வணத்தா ரகம்.

1. மங்குல் அகமே ஆம் - மேகத்துக்கு இடமேயாகும். 2. மங்கு உலகம் ஏயா - அழிவதாகிய உலகப்பற்றுப் பொருந்தாத. (௬௮)

திண்டிறல்சேர் கோமனையிற் செய்யிற் செறிந்துபல
மண்டலத்தார் மேவு மதுரையே—பண்டைமறை
யங்கங் கடந்தா ரகங்கரித்து நின்றநர
விங்கங் கடந்தார் செறிவு.

1. பல மண்டலத்தார் - பல மண்டலங்களிலுள்ளவர். 2. பலம் மண்டு அலம்தார் - பயன் நிறைந்த கலப்பைகளின் ஒழுங்கு. (௧௯)

வில்லுழவர் செங்கைகளு மின்னிடையார் கொங்கைகளும்
வல்லையங் காட்டு மதுரையே—நல்ல
வருளா கரத்த ரவிர்சடையா ரந்தி
மருளா கரத்தர் மனை.

1. வல்லையம் காட்டும் - வல்லயமென்னும் ஆயுதத்தைக் காட்டும். 2. வல்லை அங்கு ஆட்டும் - சூதாடு கருவியை அவண் அலைக்கும். (௨௦)

கண்டுமொழி யார்குழலுங் கையு மணிக்குழையும்
வண்டரணி மேவு மதுரையே—திண்டிறல்சேர்
கற்றவரை மேவுகையார் காதலா லிக்கனியக்
கற்றவரை மேவுகையார் காப்பு.

1. வண்டர் அணி - வண்டுகளின் வரிசை. 2. வண்டர் அணி - வளையல் ஆபரணம். 3. வண் தரணி - (ஒளி) வளமுள்ள சூரியனை. (௨௧)

தங்கிகரில் வேதியர்க்குந் தையலார் மென்மொழிக்கும்
வன்னிகரந் தோயு மதுரையே—பன்னுந்
துதிய மலையார் தொழுவந் தருள்வார்
பொதிய மலையார் புரி.

1. வன்னி கரம் தோயும் - அக்கினி கையிற்பொருந்தும். 2. வன்னி கரந்து ஓயும் - கிளி ஒளிந்து அடங்கும். (௨௨)

பண்ணுதமிழ் நாவலரும் பாம்பாட்டு மின்றவரு
மன்னரவைக் கூட்டு மதுரையே—பின்னவிருஞ்
சேணுத வத்தர்மதி நீவிழியார் மாயனயன்
காணுத வத்தர் கலப்பு.

1. மன்னர் அவைக்கு ஊட்டும் - அரசர் சபைக்கு உண்பிக்கும். 2. மன்னு அரவைக் கூட்டும் - பொருந்திய பாம்புகளைச் சேர்க்கும். (௨௩)

நானங் கமழ்குழலார் நற்களமும் வீரர்நெஞ்சு
மானந் தணியா மதுரையே—மோனம்
பொருந்தப் பணியார் புரம்பொடித்தார் நாயேன்
வருந்தப் பணியார் மனை.

1. மால் நந்து அணியாம் - திருமாலேந்திய சங்கின் அழகுறும். 2. மானம் தணியா - வீரம் குறையாத. (௪௪)

பந்திப் புரவிகளும் பத்திமிகுந் தோர் மனமு
மந்திரத்தே மேவு மதுரையே—முந்தொருநாட்
கன்னலங் கட்டினார் கல்லானைக் கன்பருக்குப்
பன்னலங் கட்டினார் பற்று.

1. மந்திரத்தே - கட்டுத்துறையிலே. 2. மந்திரத்து வம் - மந்திரத்தால் இன்பம். (௪௫)

போதணையி லாடவர்பாற் பொய்கையின்பாற் புன்னொலிப்ப
மாதரங்கங் கூடு மதுரையே—போதெனியே
னேய்த்துயரா வைப்பா னுடங்காது நல்லின்பம்
வாய்த்துயர வைப்பார் மனை.

1. மாதர் அங்கங்கு ஊடும் - பெண்கள் இடந்தோறும் ஊடல் செய்யும் 2. மா தரங்கம் கூடும் - பெரிய அலைகள் சேரும். (௪௬)

வாவியுங் காவு மடவார் பயிலிடமு
மாவரம்பை மன்னு மதுரையே—தேவர்புகழ்
தோட்டுச் செவியார் தொழுமவர் தேவாரப்
பாட்டுச் செவியார் பதி.

1. மா வரம்பை - பெரிய கரையை. 2. மா அரம்பை - மாமரமும் வாழைகளும். 3. மா அரம்பை - இலக்குமியும் தெய்வப்பெண்களும். (௪௭)

மீதாரு மேடைகளும் வேதந் தெளிந்தவரு
மாதான மேவு மதுரையே—மீதான
மேகந் தருவார் விலங்கற் புதல்விக்கோர்
பாகந் தருவார் பதி.

1. மா தானம் மேவும் - இலக்குமிக்கு இடமாகப் பொருந்தும். 2. மா தானம் மேவும் - சிறந்த தானங்களைப்பெறும். (௪௮)

மீனம் பயில்கொடியை மென்பூம் பணைவரம்பை
வானந் துடைக்கு மதுரையே—யீனஞ்சேர்
பிச்சைக் குவந்தார் பிறழா தடிதொழுவா
ரிச்சைக் குவந்தா ரிடம்.

1. வானம் துடைக்கும் விண்ணுலகம் தேய்க்கும். 2. வால் நந்து உடைக்கும் - வெள்ளிய சங்குகள் உடைத்துவிடும். (௪௯)

சீதமலர் வாசனையாற் றேவர்களும் வேள்கொலுவு
மாதரணி சூழு மதுரையே—நாத
வுடுக்கையணி யார்கையா ரும்பரிம்ப ரேத்துங்
கடுக்கையணி யார்கையார் காப்பு.

1. மா தரணி சூழும் - பெரிய பூவுலகை விரும்பும். 2. மாதர் அணி சூழும்- பெண்களின் வரிசை சுற்றும். (௫௦)

வெய்ய வயவர்கையில் வேந்தடியிற் செல்வரில்லில்
வையம் பணிகூர் மதுரையே—யையதமிழ்
பண்டழைத்துப் பாடுகென்றார் பாரியனைக் கேழ்கடலும்
பண்டழைத்துப் பாடுகென்றார் பற்று.

1. வை அம்பு அணிகூர் - கூரிய அம்பு வரிசை மிகும். 2. வையம் பணி கூர் - உலகத்தார் பணிவை யுறும். 3. வையம் பணி கூர் - பல்லக்கு முதலிய வாகனங்களின் அழகு மிகும். (௫௧)

கொண்டல் வரவைக் குளக்கரையிற் செய்வரம்பின்
மண்டுகம் பார்க்கு மதுரையே—திண்டிறல்சேர்
பூதப் படையாரோர் போதமினி யான்கருணிற்
போதப் படையார் புரி.

1. மண்டுகம் பார்க்கும் - தவளைகள் பார்க்கும். 2. மண்டு கம்பு ஆர்க்கும் - நெருங்கிய சங்குகள் முழங்கும். (௫௨)

ஆற்றுபணிப் பொன்வினைஞ ராதுலர்க்கீ வார்சொன்ன
மாற்றங் கெடாத மதுரையே—யாற்றலினு
லோதி மதிச்சடையா னார்பொடித்த புன்னகையார்
பாதி மதிச்சடையார் பற்று.

1. சொன்ன மாற்று அங்கு எடாத - பொன்னின் மாற்று (ஒளியளவு) அவண் தாம் எடாத. 2. சொன்ன மாற்றம் கெடாத - சொல்லிய வார்த்தை குறையாத. (௫௩)

நீளங் கொடிமதிற்கு நேரிழையார் மைவிழிக்கும்
வாளம் பொருவு மதுரையே—நாளுங்
குருத்துவந் தேறினார் கொண்டல்வண்ண னாரை
வெருத்துவந் தேறினா ரில்.

1. வாளம் பொருவும் - சக்ரவாளகிரியை யொக்கும். 2. வாள் அம்பு ஒருவும் - வாளும் அம்பும் (இணையில்லையென்று) நீங்கும். (ருச)

தாகந் தவிர்பொய்கைத் தாமரையிற் கோமறுகில்
வாகனங் குலாவு மதுரையே—மோகப்
பகைத்துப் பொடித்தார் பணிகொள்வார் மூன்றார்
நகைத்துப் பொடித்தார் நகர்.

1. வாகு அனம் - அழகிய அன்னப்புள். 2. வாகனம் - தேர் முதலிய ஊர்திகள். (ருரு)

வாகுறுமின் னார்நடையை மாணக்கர் கல்வியினை
மாகவனங் கொள்ளு மதுரையே—தேகிகட்கு
மாதியா கத்தார் மலைமங்கை தங்குமொரு
பாதியா கத்தார் பதி.

1. மாக அனம் கொள்ளும் - தேவருலகத்து அன்னப்பறவைகள் பெறும். 2. மா கவனம் கொள்ளும் - பெரிய கருத்துக் கொள்ளும். (ருசு)

தேனார் பொழிற்றலையிற் றேர்மன்னர் செய்த்தலையில்
வானாறு பாவு மதுரையே—கானாறு
போதிடத்த னத்தன் புயற்கிறைவன் போற்றுமுமை
மாதிடத்த னத்தன் மனை.

1. வான் ஆறு பாவும் - ஆகாயநதி பரவும். 2. வால் நாறு பாவும் - வெள்ளிய நாற்றுப்பாவும். (ருஎ)

பொய்யில் புலவர் புகல்கவியாற் புண்ணியத்தால்
வையமிசை யெய்து மதுரையே—நையிடையார்
மாலை யணியான் மயங்கவிடான் பூங்கொன்றை
மாலை யணியான் மனை.

1. வையம் மிசை யெய்தும் - பல்லக்கின்மீது வரும். 2. வையம் இசை எய்தும் - பூவுலகம் புகழ்பொருந்தும். (ருஅ)

அஞ்சகடை யார்குழலு மத்தனடிப் பத்தியரு
மஞ்சுவண மேறு மதுரையே—கஞ்சப்
படுக்கையங் கண்ணியார் பங்கயத்தார் காற்றோர்
கடுக்கையங் கண்ணியார் காப்பு.

1. மஞ்சு வண்ணம் ஏறும் - மேகத்தின் நிறம் பெறும். 2. மஞ்சு உவணம் ஏறும் - அழகிய கருடவாகனமேறும். (௬௪)

கண்டுமொழி யார்விழியிற் காவலவர் போவையில்
வண்டமிழ்தங் கொண்மா மதுரையே—கொண்டபெருஞ்
செல்வத் தொடையார் திருநெடு மால்விடையார்
வில்வத் தொடையார் விருப்பு.

1. வண்டு அமிழ்தம் கொள் - வண்டுக்கும் அமுதுக்கும் இணை கொள்ளும். 2. வண்தமிழ் தங்கு ஒள் - (பொருள்) வளமுள்ள தமிழ் தங்கும் புகழமைந்த. (௬௫)

தேயமன்னர் வீரர்வில்லுஞ் சீரியரு முன்னுசம
வாயம் புகுதென் மதுரையே—நேயந்
தனதன் புடையாரத் தந்தருளு மைய
ரனதன் புடையா ரிடம்.

1. சம வாய் அம்பு உகு - போர்க்குரிய தவறாத அம்பு வீழும். 2. சமவாயம் புகு - சபைகளில் சேரும். (௬௬)

மெய்யறிவி னோர்பொறைக்கும் வீரர் புரியமர்க்கும்
வையம் பொருவா மதுரையே—வெய்யமதன்
முந்தாக வந்தான் முடித்தான் பரவையிடஞ்
சந்தாக வந்தான் றலம்.

1. வையம் பொருவா - பூமி ஒப்பாகாத. 2. வை அம்பு ஒருவா - கூரிய அம்பு நீங்காத. (௬௭)

தென்றமிழ்க்குப் பல்சிறப்புஞ் செவ்வியபொற் றாமரையு
மன்றகங்கை கூடு மதுரையே—துன்றிவரும்
பூவாரப் பாடலான் போர்தொலைத்தான் மூவர்புகல்
தேவாரப் பாடலான் சேர்வு.

1. மன்று அகம் கைகூடும் - சபையிடத்துக் கிடைக்கும். 2. மன்ற கங்கை கூடும் நிச்சயமாக கங்கை சேரும். (௬௮)

ஏழையர்கண் மைக்கண் ணிணைக்கு முருவெழிற்கு
மாழைவடி வாகு மதுரையே—கோழையன்மா
னீடகமன் றத்தா னிலைத்திருந்தா ளான்றில்லை
யாடகமன் றத்தா னகம்.

1. மாழை வடி ஆகும் - மாவடுவை ஒக்கும். 2. மாழை வடிவாகும் - பொன்னுங்குற்றமுறும். (௬௯)

ஆண்டுத் திதியி லறத்தோரெப் போதுநல்லோர்
மாண்டவரைப் போற்று மதுரையே—யீண்டடியேன்
பாழாக மத்தர் பயிற்சியுறு தாண்டருறை
லேழாக மத்த ரிடம்.

1. மாண்டவரை - இறந்தவர்களை. 2. மாண் தவரை-சிறந்த தவசிகளை. (௭௰)

வாகமருந் தண்டலைகண் மன்பதைகண் மாளிகைகண்
மாகனக மேற்சேர் மதுரையே—மோகமுறு
வேதாக மங்கையார் மேவுமலை மங்கையார்
வேதாக மங்கையார் வீடு.

1. மா கனகம் - மாமரம் நீருண்ட மேகத்தின். 2. மா கனகம் - இலக்குமியும் பொன்னும். 3. மாகம் நக - ஆகாயத்தில் விளங்க. (௭௧)

மூளமரில் வீரர்கையு மோகமுட வார்கண்மெய்யும்
வாளியைந்து நண்ணு மதுரையே—நாளு
நிவாதசாங் கத்தா னிருமலயோ கத்தான்
றுவாதசாங் கத்தான் றொடர்பு.

1. வாள் இயைந்து - வாளாயுதம் பொருந்தி. 2. வாளி ஐந்து - பஞ்சபாணங்கள். (௭௨)

பூவரசர் பூவெளியும் பொற்பார் படித்துறையும்
வாவியலை மோது மதுரையே—யாவனுடன்
மெல்லடிக்கு நேர்வாளும் விள்ளரியான் பார்த்தன்கை
வில்லடிக்கு நேர்வான் விருப்பு.

1. வாவி அலை (அல்லை) தாவி இருளை. 2. வாவி அலை - பொய்கையின் அலைகள். (௭௩)

சாலியனை யார்மலரைத் தாழ்குழலி னுற்பகலை
மாலையாக் குந்தென் மதுரையே—கோளுடலிற்
பட்டிருவ முற்றானி பங்கொண்டான் பாரதி
யெட்டிருவ முற்றா னிடம்.

1. மாலை யாக்கும் - மாலைகட்டும். 2. மாலை ஆக்கும் - மாலைக்காலமாக்கும். (எ௪)

ஆறு விளைஞர்நெஞ்ச மன்றொருவே ளாளனுமம்
மானாரங் காட்டு மதுரையே—கானமின்னார்
மத்தடிமை யாக்கையான் வாழ்த்தரியா னென்குடியைக்
கொத்தடிமை யாக்கை குடி.

1. மானார் அங்கு ஆட்டும் - பெண்கள் அவனை அலைப்பிக்கும். 2. மால் நாரம் காட்டும் - மேகத்தினிடம் அன்பைக் காண்பிக்கும். (எ௫)

பூவுற்ற சோலை புதுமதுவு மாவினமும்
வாவிக் களிக்கு மதுரையே—பாவப்
பிணியான கங்கணத்தான் பெட்டென்னைக் காப்பான்
பணியான கங்கணத்தான் பற்று.

1. வாவிக்கு அளிக்கும் - பொய்கைக்குத்தரும். 2. வாவி களிக்கும் - தாவி மகிழும். (எ௬)

ஆயா ரகத்து மறிஞர் தமதகத்து
மாயா நலங்கூர் மதுரையே—யாயர்கருட்
டைவசித்தாங் தத்தானுன் பட்டழியா மற்புரக்குஞ்
சைவசித்தாந் தந்தான் றலம்.

1. மாயா அலங்கூர் - மயக்கத் தீ மிகும். 2. மாயா நலம் கூர் - கெடாத நன்மை மிகும். (எ௭)

கான மயிலனையார் கண்ணு முருவெழிலு
மானலங் காணு மதுரையே—நாளுட்
களைச்சுவடு முற்றமுன் காப்பா னுமைமகை
வளைச்சுவடு முற்றான் மனை.

1. மான் அலம் - மானின் அமைவு. 2. மால் நலம் - மிக்க அழகு. (எ௮)

தக்கவே ளாண்மகனுங் தையலார் தாழ்குழலு
மைக்குப் பிணையா மதுரையே—செக்கச்
சிவந்தவா கத்தன் றிகம்பரனே ரெட்டு
நிவந்தவா கத்த னிலம்.

1. மைக்கு பிணையாம் - மேகத்துக்குப் பிணையாம். 2. மை குப்பு இணை யாம் - இருட் கூட்டத்துக்கு ஒப்பாகும். (௭௯)

தெள்ளியசீர்ச் செல்வர்களுந் தீந்தமிழால் வல்லோரும்
வள்ளியோ ராகு மதுரையே—புள்ளியதோ
லாடை யுடையா னவிர்சடையான் மண்சுமந்த
கூடை யுடையான் குடி.

1. வள்ளியோர் - கொடையாளிகள். 2. வள்ளியோர் - முருகக்கடவுள். (௮0)

காவுமிறை புத்திரருங் கற்றவரு மோங்குபல
மாவிரத மேவு மதுரையே—யாவலுட
னென்பணியு மேற்று ரிமையவர்க்கு மெட்டாதா
ரென்பணியு மேற்று ரிடம்.

1. பல மா இரதம் - பல விருக்ஷம் மா விருக்ஷங்களின் (கனிகளிலிருந்து வடிகின்ற) தேன். 2. பல மா இரதம் - பல குதிரைகளைப்பூட்டிய தேர்கள். 3. பலம் மா விரதம் - பயன் தருகின்ற சிறந்த விரதங்களை. (௮௧)

தேனிவர்பூங் காவனமுந் தேயமன்னர் கைவாளு
மானினியக் கஞ்சேர் மதுரையே—யேன
வரிபா லனைத்த னகங்குழைய வன்பர்
பரிபா லனைத்தன் பதி.

1. மானின் இயக்கம் - மான்களின் சஞ்சாரம். 2. மானினி அக்கம் - பெண்களின் கண்களை. (௮௨)

கோலமலர் நந்தனத்திற் கூடுமன்பர் நெஞ்சகத்தின்
மாலதிகந் தஞ்சேர் மதுரையே—சூலங்
கணிச்சிகர மேயவான் கைலாசத் தும்பர்
மணிச்சிகர மேயவரன் வாழ்வு.

1. மாலதி கந்தம் சேர் - முல்லை மணம்பொருந்தும். 2. மால் அது இகந்து அம் சேர் - மயக்கமாகிய அது நீங்கி அழகு சேரும்.

ஈசர்விமா னத்தை யெழிற்பொய்கைத் தாமரையை
வாசவனங் காக்கு மதுரையே—பேசு
முருப்பத்துக் காவலா னூர்தியா னன்பர்
விருப்பத்துக் காவலான் வீடு.

1. வாசவன் அங்கு ஆக்கும் - இந்திரன் அவண் செய்துவைக்கும். 2. வாச அனம் காக்கும் - வசிக்கின்ற அன்னப் பறவைகள் காக்கும். (௮௪)

இல்லறத்துப் பன்னலமு மெல்லார் நயவுரையும்
வல்லவிந யங்கூர் மதுரையே—நல்லவினை
முற்றப் பணித்தானே முன்னின்று தன்னடிநான்
பற்றப் பணித்தான் பதி.

1. வல்லவி நயம் கூர் - மனைவியின் நன்மை மிகும். 2. வல்ல வினயம் கூர் - திட்பமான அறிவு மிகும். (௮௫)

ஆறடைக்கு நாட்டாண்டி யண்ணலுஞ் செங்கோலு
மாறங்கை மன்னு மதுரையே—நீறணியா
ரொன்றற் கரியா னொருவணிக மாதுக்கு
மன்றற் கரியான் மனை.

1. மாறு அங்கை மன்னும் - பிரம்பை அழகிய கையிற் பொருந்தும். 2. மால்தங்கை மன்னும் - விட்டுணுவின் தங்கையாகிய தடாதகைப் பிராட்டியார் சேரும். (௮௬)

ஓயாமற் பாவலரு மொண்டொடியார் மைவிழியும்
வாயாரப் பாடு மதுரையே—தூயருக்கு
மட்டிக் களைந்தானெய் வார்த்தனையான் றீயனங்கம்
வெட்டிக் களைந்தான் விருப்பு.

1. வாய் ஆரப் பாடும் - வாய் நிறையத் துதிக்கும். 2. வாய் ஆர் அப்பு ஆடும் - விளிம்பு பொருந்திய அம்புபோல் சுழலும். (௮௭)

தேசுமட வார்நிறமுஞ் செய்ய மலர்க்குழலு
மாசுவண நேரு மதுரையே—காசினியி
லின்னம் பலத்தாரு மின்பமுறச் செய்தருளும்
பொன்னம் பலத்தான் புரி.

1. மா சுவணம் நேரும்—அழகிய பொன்போலும். மாசு வண்ணம் நேரும் - மேக நிறத்தை யொக்கும். (௮௮)

மாணவகர் செங்காலின் மன்னவர்போர் வீரர்கையில்
வாணிவந்து மன்னு மதுரையே—காணவெட்ட
மைந்ததிக்கு மீவான் மகிவியப்பத் தன்னருளொன்
சந்ததிக்கு மீவான் றலம்.

1. வாணி வந்து மன்னும் - சரசுவதி வந்து நிலைபெறும். 2. வாள் நிவந்து மன்னும் - வாளாயுதம் உயர்ந்து மேவும். (௨௯)

ஆதரங்கூர் தண்டமிழ்க்கு மாயமின்றூர் வெண்ணெய்க்கு
மாதவனங் காக்கு மதுரையே—காதின்
மணத்துக் குழையான் வழுத்தாதார் மாட்டு
மணத்துக் குழையான் மனை.

1. மாதவன் அம் காக்கும் - பெரிய தவத்தினையுடைய அகத்திய முனிவர் அழகைப் பாதுகாக்கும். 2. மாதவன் அங்காக்கும் - விட்டுணுவாய்திறக்கும். (௩௰)

காவலருஞ் செல்வர்களுங் கன்னியர்கண் கண்டவரு
மாவையக மன்னு மதுரையே—யோவாப்
பணிவிடையா ரத்தர் பழவடியார் செய்யும்
பணிவிடையா ரத்தர் பதி.

1. மாவையகம் - பெரிய உலகை. 2. மாவை அகம் - இலக்குமியை வீட்டில். 3. மாவை அகம் - மாவடுவை அல்லது வண்டினத்தை மனத்தில். (௩௧)

தண்டலைவார் செந்தேனுஞ் சார்ந்தார்க்குத் தென்காலு
மண்டுகளைப் பாற்று மதுரையே—பண்டே
பிரமன் றலைக்கையார் பேணுமலை மங்கை
வரமன் றலைக்கையார் வாழ்வு.

1. மண் துகளை பாற்றும் - மண் தூசியை நீக்கும். 2. மண்டு களைப்பு ஆற்றும் - பொருந்திய களைப்பை நீக்கும். (௩௨)

வீறுடைய மண்பதைக்கு மிக்கவளப் பைங்கூழ்க்கு
மாறனித நீர்சார் மதுரையே—தேறிநித
மேத்தியா ரத்தனையே யெண்ணா வெனக்கருளு
மாத்தியா ரத்த னகம்.

1. மாறன் இத நீர் சால் - பாண்டியன் இனிய தன்மை பொருந்தும். 2. மால் தனித நீர்சால் - மேக முழக்கத்துடன் மழைநீர் மிகும். (௩௩)

காசறுநூல் வல்லாருங் காரிகையார் மைவிழியு
மாசுறவை நீக்கு மதுரையே—கூசிப்
பரவாது காப்பான்மைப் பாலெனினு நாயே
னிரவாது காப்பா னிடம்.

1. மாசு உறவை - குற்றமுள்ள உறவை. 2. மா சுறவை - பெரிய சுறு மீனை. (கச)

ஓது வயவர்மெய்யு மோங்கு மனைகளும்பூ
மாதிட மன்னு மதுரையே—யோதிமனங்
கூடப் பணிப்பாரிற் கோதொழித்து நான்றனையே
பாடப் பணிப்பான் பதி.

1. பூ மா திடம் - அழகிய மிக்க வலிமை பெறும். 2. பூமாது இடம் - மன்னும் இலக்குமிக்கு இடமாக நிலைபெறும். (கரு)

நீட்பரவு காவின்பால் வேக வதியின்பான்
மாப்புளின மேயு மதுரையே—நாப்பரவு
செந்தமிழை யாதரிப்பார் தீயேற்கு நேராதி
பைந்தமிழை யாதரிப்பார் பற்று.

1. மா புள் இனம் - வண்டுகளும் பறவையினங்களும். 2. மா புளினம் - பெரிய மணற்குவியல்கள். (கசு)

செய்யாரத் தேன்பொழிலுஞ் சீரியோர் செம்மனமு
மையாப் பொழியு மதுரையே—கையார
நந்தங் கெடுத்தாரு நாடரியார் நாளுமன்பர்
பந்தங் கெடுத்தார் பதி.

1. மையாப் பொழியும் - மேகமாகப் பொழியும். 2. மையாப்பு ஒழியும் - மயக்கம் நீங்கும். (கஎ)

விண்டலையார் தண்டலையுள் வேரித் தடமலரில்
வண்டிமிரஞ் சாரு மதுரையே—தொண்டருக்குப்
போதந் தருவார் புரந்தரன்மால் காணாநற்
பாதந் தருவார் பதி.

1. வண் திமிரம் - மிக்க இருள். 2. வண்டு இமிர் அம் - வண்டுகள் ஒலிக்கும் அழகு. (கஅ)

பஞ்சவன்போர் வீரர்களும் பண்ணைக் குருகினமும்
வஞ்சித் திறைகொள் மதுரையே—நெஞ்சிற்
றெருளா யமைந்தார் செழியரா னார்சொற்
பொருளா யமைந்தார் புரி.

1. வஞ்சி திறை கொள் - சேரனாட்டுத் திறைப்பொருளைக் கொள்ளும்.
2. வஞ்சித்து இறை கொள் - வஞ்சனையாக இறையைக் கொள்ளும். (௯௯)

போதடுக்கு மென்கொடியும் பொன்படைத்தார் செங்கையு
மாதருக்க நேரா மதுரையே—பூதலத்திற்
பாழுவைப்பா னாளும் பயிலா தெளியேனை
வாழுவைப்பா னாரு மனை.

1. மாதர் உக்கம் நேராம் - பெண்களின் இடையை நிகர்க்கும். 2. மா தருக்கம் நேராம் - சிறந்த கற்பகமும் மேகமும் போலும். (௧00)

மதுரைச்சிலேடைவெண்பா முற்றிற்று.